[27th March 1961

துக்காக அவர்கள் காத்திருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, இது பற்றி புகார்கள் வந்தனவா? இந்த செக்ஷனை விஸ்தரிக்க வேண்டுமென்று கோரிக்கைகள் வந்தனவா? அதுபற்றி எடுக்கப் பட்டிருக்கும் நடவடிக்கைகள் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த வேலையெல்லாம் ஒரு "பாட்டர்ன்" படி நடக்கிறது; இத்தனை பேஷண்டுகளுக்கு இத்தனை கம்பௌண்டர் என்று ஏற்படுத்துகிறார்கள். யாராவது லீவிலே போனால், அப்பொழுது கொஞ்சம் நெருக்கடி ஏற்படலாம். கூடுமானவரையில் பேஷண்டுகளுக்குத் தகுந்த மாதிரி, கம்பௌன் டர்கள் போட்டிருக்கிறோம்.

*Hospital at Jayankondan (construction of building)*

* 1102 Q.—SRI S. RANGANATHA MUDALIAR (on behalf of SRI K. R. VISWANATHAN) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there is any proposal to construct building for the Government Hospital at Jayankondan, Tiruchirappalli Division; and

(b) if so, when and what the cost thereof?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) The work will be taken up during the Third Five-Year Plan period. Its approximate cost is Rs. 3·17 lakhs.

*Agricultural Income-tax Revenue*

* 1108 Q.—SRI N. R. THIAGARAJAN :
SRI T. S. RAMASWAMY : } கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப் பாரா—

1959-ம் வருஷம் ஏப்ரல் மீ 1-ம் தேதி முதல் 1960-ம் வருஷம் மார்ச் மீ முடிய விவசாய வருமான வரி மூலம் நமது சர்க்காருக்கு ஜில்லா வாரியாக கிடைத்த வருமானம் எவ்வளவு?

THE HON. SRI M. A. MANICKAVELU : A statement [a] showing the particulars is placed on the table of the House.

SRI T. S. RAMASWAMY : In view of the fact that there is abnormal rate of income-tax prevailing in Kanyakumari district, will the Government review the position and try to bring it on a par with other districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : I do not understand what the hon. Member means by saying "abnormal rate". Whatever rate is prescribed under the Act, is being levied.

---

[a] Printed as Appendix II on page 236 infra.

27th March 1961]

**SRI S. M. ANNAMALAI :** இந்த விவசாய வருமான வரி 1959-60-ஐ விட 1960-61-ல் போதிய அளவு குறைந்திருக்கிறது உண்மையா? இதற்குக் காரணம் என்ன?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** இது ஏறுவதும் இறங்குவதும் சகஜம். காரணம் ஒன்றும் சொல்வதற்கில்லை.

SRI T. S. RAMASWAMY : May I know, Sir, whether it is a fact that the rates of income-tax in Kanyakumari district is much higher than in other districts. If so, will the Government look into the matter and bring it on a par with other districts?

THE HON. SRI M. A. MANICKAVELU : The hon. Member is aware that there is what is called basic tax in Kanyakumari district. He wants the advantages only and he does not want to take the disadvantages.

SRI T. S. RAMASWAMY : Two days back, Sir, the Hon. Minister gave a reply to a similar question that in the previous year, i.e., 1957–58, the agricultural income-tax derived from Kanyakumari district was only 7 lakhs but here it is mentioned as 13 lakhs. May I know, Sir, the reason why it is double here?

THE HON. SRI M. A. MANICKAVELU : Better collection, better seasonal condition, etc., are the factors

*Award of the Wage Board (implementation in Textile Mills)*

*** 1093 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN :** கனம் கைத் தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ் நாட்டிலுள்ள நூல் ஆலைகளில், சம்பள போர்டு தீர்ப்பை அமுல்படுத்தாத ஆலைகள் எத்தனை?

(இ) அதற்குக் காரணமென்ன?

(உ) சர்க்காரின் நடவடிக்கை என்ன?

**THE HON. SRI R. VENKATARAMAN : A statement[a] is placed on the table of the House.**

**SRI V. K. KOTHANDARAMAN :** இரண்டாயிரம் ஸ்பிண்டிலுக்கு மேலாக இருக்கக்கூடிய மில்கள், நூல் ஆலைகளின் சம்பள போர்டு தீர்ப்பை அமுல் நடத்தவில்லை. இரண்டாயிரம் ஸ்பிண்டிலுக்கு மேலாக உள்ள மில்லில் நிர்வாகஸ்தர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் உள்ள தகராறு காரணமாகத்தான் நிறுத்தப்பட்டிருக்கிறது. இப்படி தொழிலாளர்கள் நலனைப் பாதுகாக்க முடியாத அளவில் இருக்கும்போது இதை சர்க்கார் எடுத்து நடத்தி போர்டின் தீர்ப்பை அமுலாக்குவதற்கு உத்தேசம் உண்டா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** சர்க்காருக்கு அவ்வித உத்தேசம் இல்லை.

---

[a] **Printed as Appendix III on pages 237–239 infra.**